


# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 55 திருவள்ளுவர் ஆண்டு 2055, சிலை – திசம்பர் – 2024








## அச்சுத்தொழில்நுட்பவியல் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Antique paper | தடித்த தாள் |
| Art paper | வழவழப்புத்தாள்/கலைத் தாள் |
| Bond paper | ஆவணத் தாள் |
| Butter paper | மெழுகுத் தாள் |
| Composing stick | அச்சுக்கோப்புச் சட்டம் |
| Cylinder press | உருளை அச்சுப்பொறி |
| Edge decoration | விளிம்பு ஒப்பனை |
| Electro typing | மின்னச்சு |
| Feed board | ஒரு பலகை அச்சு இயந்திரம் |
| Frontispiece | முகப்புப் படம் |
| Gallery rack | அச்சுத் தட்டு தாங்கி |
| Gluing up | பசை பூசுதல் |
| Hand press | கை அச்சுப்பொறி |
| Imposing stone | பக்க ஒழுங்கமைப்புக் கல் |
| Hand roller | கை உருளை |
| Litho machine | கல் அச்சுப்பொறி |
| Lithography | கல் அச்சுக் கலை |
| Marble paper | வடிவ ஒட்டுத்தாள் |
| Offset printing | மறுதோன்றி அச்சுமுறை |
| Photo engraving | ஒளிப்பட அரிப்பு முறை |
| Photo typesetter | ஒளியச்சுக் கோப்பு |
| Register mark | பதிவுக் குறி |
| Relief printing | மேற்பரப்பு அச்சு முறை |
| Rotary press | சுழல் அச்சுப்பொறி |
| Printed forme | அச்சிட்ட படிவம் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, சிலை (மார்கழி)
**திசம்பர் – 2024**





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

தொன்மைமிக்க தமிழ்மொழி ஒட்பமும் நுட்பமும் நிறைந்ததாகும். அதனை உணரவல்லார்க்குத் தமிழின் சொல்வளம் சுவை பயக்கும். செழுந்தமிழின் சொல்நுட்பத்திற்குச் சான்றாகும் வண்ணம், அன்புக்கும் பேரன்புக்குமான நுட்பத்தை விளக்கும் வகையில் தமிழன்பர் ஒருவர் கட்செவியில் எழுதியுள்ளள செய்தியினை இங்கே பதிவுசெய்கிறேன்.

கடலுக்கும் பெருங்கடலுக்கும் உள்ள வேறுபாடுதான், அன்புக்கும் பேரன்புக்கும் உள்ள வேறுபாடு ஆகும். அளவிட முடியாத, மிகவும் ஆழமான அன்பையே " பேரன்பு " என்பர்.

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு". ( குறள் – 72)

"அன்பு இல்லாதவர் எல்லாப் பொருள்களையும் தமக்கே உரிமையாகக் கொண்டு வாழ்வர். அன்பு உடையவர் தம் உடமையை மட்டுமல்ல, தன் உயிரையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழ்வர் " என்று அன்புக்கு இலக்கணம் வகுத்தார் வள்ளுவர்.

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே " ( திருமந்திரம் – 270)

அன்பு வேறு, சிவம் வேறு. இரண்டும் ஒன்றல்ல. வேறு வேறு என்று சொல்பவர்கள் அறிவில்லாத மூடர்கள். அன்பே சிவம் என்பதை அறியாது இருக்கிறார்கள். அன்புதான் சிவம் என்பதை எல்லோரும் அறிந்து விட்டால், பிறகு அவர்களே அன்புருவான சிவமாய் வாழ்ந்திருப்பார்கள்.
"அன்பே கடவுள் " என்பதை உலகிற்கு உறுதிபடக் கூறுகிறார் திருமூலர்.

எல்லா உயிர்களுக்கும் நன்மை பயக்கும் உணர்வு நிலையே " சிவம் " என்பர். அதாவது " கடவுள் நிலை " . எல்லா உயிர்கள்மீதும் அன்பு காட்டும் கருணை உள்ளமே " கடவுள் நிலையை " அடையும்.

பெருஞ்சித்திரனார் என்னும் புலவர், ஒருமுறை குமண வள்ளலைச் சந்திக்கச் சென்றார். தன் குடும்பத்தின் வறுமை நிலையைக் குமண வள்ளலிடம் எடுத்துக் கூறினார். அமைதியாக் கேட்டுக் கொண்டிருந்த குமணன், பெருஞ்சித்திரனாரிடம் ஒரு யானையைக் கொடுத்தான். பெருஞ்சித்திரனாருக்கு ஒன்றும் புரியவில்லை. தன் வயிற்றுக்கே உணவில்லை. இந்த யானைக்கு எப்படி உணவளிப்பது என்ற கவலையோடு யானையைப் பிடித்துக் கொண்டு புறப்பட தயாரானான்.

" நில்லுங்கள் புலவரே, பரிசைக் கொண்டு போவதற்குத்தான் யானையைக் கொடுத்தேனே தவிர, தங்களுக்குப் பரிசு இன்னும் தரவில்லை. கொஞ்சம் பொறுங்கள். இதோ பரிசு வருகிறது " என்றார் குமண வள்ளல்.

வியப்போடு திரும்பிப் பார்த்தார் பெருஞ்சித்திரனார். மூட்டை மூட்டையாகப் பொன்னையும் பொருளையும் கொண்டு வந்து யானை மீது ஏற்றினார்கள். குமணனின் கொடைத்தன்மையை எண்ணி வியந்தார் பெருஞ்சித்திரனார்.

அவ்வளவு செல்வங்களையும் பெருஞ்சித்திரனார் என்ன செய்தார் தெரியுமா?

" நின்நயந்து உறைநர்க்கும், நீநயந்து உறைநர்க்கும்,
பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்,
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்,
இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது ,
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே!
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே " ( புறநானூறு – 163 )

" என் மனைவியே, பழங்கள் தொங்கும் மரங்கள் நிறைந்த முதிரமலை தலைவனும், செவ்விய வேலையுடையவனும் ஆகிய குமணன் கொடுத்த இந்தச் செல்வத்தை, உன்னை விரும்பி வாழ்பவர்க்கும், நீ விரும்பி வாழ்பவர்க்கும், பல வகைகளிலுல் சிறந்த கற்புடைய உன் சுற்றத்தார்க்கும், மூத்தோர்களுக்கும் , நமக்கும் , நம் சுற்றத்தாரின் கொடிய பசியை நீக்குவதற்காகக் கடன் கொடுத்தோர்க்கும், இன்னார்க்கு என்று கணக்குப் பார்க்காமல் என்னையும் கலந்தாராயாமல், இப்பொருளை வைத்து நாம் நன்றாக வாழலாம் என்று எண்ணாமல் எல்லோர்க்கும் வழங்குவாயாக " என்று தன் மனைவியிடம் வேண்டுகிறார் பெருஞ்சித்திரனார்.

வறுமையின் கொடுமையைக் கண்டவர்கள் அளவு கடந்த செல்வத்தைக் கண்டதும் ஆடம்பரமாய் வாழ எண்ணுவது வழக்கம். அதையெல்லாம் செய்யாமல் " யாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வைகம் " என்ற உயர்ந்த நோக்கத்தோடு தனக்குக் கிடைத்த செல்வங்களை எல்லாம், தான் வறுமையுற்ற காலத்தில் உதவியவர்களுக்கு வாரி வழங்கும் இந்த வள்ளல் தன்மையை என்னவென்று சொல்வது! ஒட்டுமொத்த தமிழ்ச் சமூகத்தின் பண்பார்ந்த உள்ளத்தையே உணர்த்தி நிற்கிறது பெருஞ்சித்திரனாரின் உள்ளம்.

தன்னைப் போல எல்லோரையும் நேசிப்பது அன்பு. தனக்குக் கிடைத்தது எல்லோர்க்கும் கிடைக்க வேண்டும் என்று நினைப்பதே " பேரன்பு ".

இப்படி, ஒட்பத்தமிழில் நுட்பச் செய்திகள் நிறைந்திருக்கின்றன. அவற்றை உணர்ந்து, சுவைத்து, அடுத்த தலைமுறையும் உணர்ந்திடச் செய்வோம்.

தமிழைச் சொல்வோம்! தமிழால் வெல்வோம்!

# பாவாணரின் பங்களிப்பு மொழியியல் துறையில்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதுபெற்றவர்

### 1. பாவாணர் படைப்புகள்

மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர்தம் படைப்புகள் பல திறத்தன. மொழிநூல் ஆய்வு வகையில் அமைந்தன ஒப்பியன் மொழிநூல், முதற்றாய்மொழி, திரவிடத்தாய், வண்ணனை மொழிநூலின் வழுவியல், சுட்டு விளக்கம் ஆகியனவாகும். சொல்லாய்வு வழிபட்டன சொல்லாய்வுக் கட்டுரைகள், வேர்ச்சொற்கட்டுரைகள், வடமொழி வரலாறு, தமிழ் வரலாறு, சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியின் சீர்கேடு, இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? ஆகியனவாகும். தமிழர் திருமணம், பழந்தமிழாட்சி, தமிழ்நாட்டு விளையாட்டுகள், தமிழர் பண்பாடும் நாகரிகமும், தமிழர் வரலாறு, தமிழர் மதம், மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை, தமிழிலக்கிய வரலாறு என்பன வாழ்வியல் ஆய்வு வழிபட்டன. திருக்குறள் மரபுரையும் பல்வேறு சமயங்களில் பாடிய பாடல்கள் உரையும் பாட்டும் வழிபட்டன. கட்டுரை வரைவியல் உயர்தரக் கட்டுரை, இலக்கணம் (இரண்டு பாகங்கள்), செந்தமிழ்க் காஞ்சி, இயற்றமிழ் இலக்கணம் ஆகியனவும் அவ்வப்போது எழுதப்பட்ட கட்டுரைகளும் இந்நான்கு கூறுகளைத் தழுவியன. The Primary classical language of the World, A Critical Survey of the Madras University Tamil Lexicon, The language problem of Tamil Nadu and its logical solution, An Epitome of the Lemurian Language and its Ramifications என்பன இந்நாற் பிரிவுகளின் பிழிவுகளே ஆகும். (இளங்குமரன் 1985: 51).

### 2. மொழியியல்

மொழியை அறிவியல் அடிப்படையில் விளக்குகின்ற கலை மொழியியல். மொழியைப் பற்றிய எல்லா உண்மைகளையும் கண்டு, அவற்றை விளக்கிப் பல்வேறு வகைகளில் பயன்விளைக்க உறுதுணையாக அமைவது மொழியியல். மொழியியல் தன் ஆய்வெல்லையை இலக்கண இலக்கியங்களோடு நிறுத்திக் கொள்வதில்லை. இது மொழிப் பயன்பாடு இருக்கும் எல்லா விடங்களுக்கும் தன் ஆய்வு பரப்பைப் பரவலாக்கிக் கொள்கின்றது.

இவ்வடிப்படையில் தான் பேச்சுமொழி, குழந்தைமொழி, திருந்தாமொழி, இறந்தமொழி, கிளைமொழி போன்ற அனைத்தையும் மொழியியல் ஆராய்கிறது. 19ஆம் நூற்றாண்டில் உருவாக்கம் பெற்ற மொழியியல் ஆய்வு மொழிபற்றிய பல புதிய உண்மைகளை வெளிப்படுத்தியது. மொழிகளின் ஒலியமைப்பு, இலக்கணவமைப்பு, சொற்கள் ஆகியவற்றை ஒப்பிட்டு ஆராய்வதன்மூலம் மொழிகளுக்கிடையே காணப்படும் இனத்தொடர்பை விளக்க ஏதுவான நெறிமுறைகளை ஏற்படுத்தியது. மொழியியல் வண்ணனை மொழியியல், ஒப்பீட்டு மொழியியல், வரலாற்று மொழியியல் என மூன்று வகைப்படுகின்றன. மொழியைப் பேசுவது எளிது. ஆனால் மொழியை ஆராய்வது அத்துணை எளிதன்று. மொழியைப் பேசும் ஆற்றலை செய்திறன்(performance) என்றும் மொழியைப் பற்றிய அமைப்புகளை ஆராய்வது அறிதிறன் (competence) என்றும் குறிப்பிடுவர். மொழியியல் மொழி அறிதிறனை ஊக்குவித்து வளர்க்கின்றது.

மொழி பற்றிய சிந்தனை பன்னெடுங்காலமாக இருந்து வந்துள்ளது. தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் வழக்கத்தில் இருந்துள்ளமை இதைத் தெளிவாகக் காட்டுகிறது. என்றாலும் மொழியை அறிவியல் அடிப்படையில் ஆய்ந்து அதன் தன்மைகளை விளக்கும் மொழியியல் பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் தொடங்கியது. இப்போக்கை முற்றும் உணர்ந்தவராகத்தான் பாவாணர் தம் ஆராய்ச்சியை முன்னடத்திச் சென்றுள்ளா என்பதை "மொழிநூலே உலகின் முதன்முதல் இலக்கணம் இயற்றப் பெற்ற தமிழில் தோன்றியமையால் தமிழர் கண்டதாகும். அது இக்காலத்திற்போல் விரிவடையாத தேனும், மொழிகள் பல்காத முந்திய காலத்தில் தோன்றியமையால், அக்கால முறைப்படி முழுநிறைவானதே' (பாவாணர் 1944 முக. XXVI) என்றும் 'ஒரு மொழிக்குட்பட்ட சொற்களை ஆராயும் சொல்லாராய்ச்சியும், பல மொழிகளை ஒப்பு நோக்கும் மொழியாராய்ச்சியும். மேனாட்டாரிடமிருந்து அண்மையில் அறிந்தவை"(பாவாணர் 1992 : முக. V) என்றும் அவரே கூறுவதிலிருந்து அறியலாம்.

பாவாணர்தம் படைப்புகளில் மேலோங்கி நிற்பது சொல்லாராய்ச்சியும் அச் சொல்லாராய்ச்சிக்கு உறுதுணையாக இருக்கும் மொழியாராய்ச்சியும் ஆகும். அவர் தொட்ட துறைகள் அனைத்திலும் இவ்விரண்டிற்கும் முதன்மை இடம் கொடுத்துள்ளார். பெரும்பாலும் தம் ஆய்வின் மூலம் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்து

மொழிநிலையை விளக்குவதற்கு இவர் முற்படுகிறார். அவ்வாறிருக்கும் பொழுது மிகப் பழைய நிலையை உணர்வதற்கு மற்ற சான்றுகளைக் காட்டிலும் மொழியே உரியதாக இருக்கும் என்று கருதியமையால் இவற்றிற்கு முதன்மை இடம் அளித்துள்ளார். இவற்றுள்ளும் சொல்லாராய்ச்சிக்கு அவர்தம் ஆராய்ச்சியில் தலையாய இடம் உண்டு.

### 3. சொற்பிறப்பு

சொல்லின் பிறப்பு அதன் வரலாறு ஆகியவற்றைப் பற்றி விளக்குவதே சொற்பிறப்பாகும். சொற்பிறப்பு மொழியின் இயல்பு பற்றிய அடிப்படைத் தன்மைகளையும் உள்ளடக்கியதாக அமைகிறது (Hans Arself 1982:84). இவ்வாறு இருக்கும் உண்மையை நன்கு உணர்ந்திருந்ததனாலேயே பாவாணர் சொல்லாராய்ச்சியை விரும்பி ஏற்றுக்கொண்டார். சொல்லாராய்ச்சி, அதைக்கொண்டு மொழியின் தன்மை, மொழியில் புதைந்து கிடக்கும் வரலாற்று பண்பாட்டுச் செய்தி ஆகியவற்றை எடுத்துக்காட்ட இயலும் என்று கருதியமையே இதற்கு முதன்மையிடம் அளித்ததற்குக் காரணமாகும். இந்நோக்கத்தைத் "தமிழையும் பிற திரவிட மொழிகளையும் ஆராய்வதால் தமிழின் சிறப்பையும் பழந்தமிழரின் பெருமையையும் அறிவதுடன் உலக முழுதுந் தழீஇய குலநூல் (Ethnology), வரலாற்று நூல்(History), மொழிநூல் (Philology) ஆகிய முக்கலைகளின் திறவுகோலையும் காணப் பெறுவதா யிருத்தலின்" (பாவாணர் 1944 முக. XXVI) என்று அவரே கூறியிருப்பதனால் அறியலாம்.

### 4.கருத்து

ஒரு கருத்து அடிப்படையில் சொல்லின் வளர்ச்சியை விளக்கி இருப்பது இவரது தனித்தன்மையாகும், பொதுவாகச் சொல்லடியை வேர் ஆகவும் ஆக்க ஈறுகள் (விகுதிகள் அல்லது பின்னொட்டுகள்) ஆகவும் பிரித்து ஆராய்வது குடும்ப மொழிகளின் ஒப்பீட்டு ஆய்வில் முதன்மையிடம் பெறுகிறது. ஒப்பிட்டுப் பார்த்தால் அடி அல்லது சொல் இனமொழிகளுள் வடிவத்திலும் பொருளிலும் முழுமையாக அல்லது பகுதி அளவில் ஒன்றேயாக இருக்கும். பொதுவாக இருக்கும் இந்த அடிகளை வேர் என்று கருதுவர். வேரைத் தொடர்ந்துவரும் ஆக்க ஈறுகள் மொழிக்கு மொழி மாறுபட்டிருக்கும் (Subrahmanyam 1983:13). ஒரே மொழியிலும் ஓர் அடியிலிருந்து பல சொற்கள் உருவாகின்றன. மொழியியலாளர் சொற்களுக்கு வேர் மூலம் காண்பதில் இந்த அளவில் நிறுத்தி விடுகின்றனர். ஆனால் பாவாணர் இதற்குமேல், வேருக்கு முன்னும் சொன்மூலத்தைக் காண்கிறார். கருத்தடிப்படையில் சொன் மூலங்களை வைக்கிறார். இவ்வகையில், தம் வேர்ச்சொற் கட்டுரைகள் என்ற நூலில் உயிர்முதல் வேர்ச்சொற்கள், உயிர்மெய் முதல் வேர்ச்சொற்கள் என்று இரண்டு பகுதிகளில் முறையே பதினைந்து பதினாறுமாக முப்பத்தொரு கருத்தடிப்படை வேர்களைக் குறித்துள்ளார்.

சொற்களைப் பகுத்து அதில் அடங்கிய செய்திகளைப் பார்த்தால் ஒவ்வொரு சொல்லும் ஒரு கதையை உள்ளடக்கியதாக இருக்கும். சொல்லை நன்கு ஆராய்ந்து பார்க்காமல் மேலோட்டமாகப் பார்ப்பவர்க்கு இது தெரியாது. முறையாகச் சொல்லைப் பகுத்து ஆராய்ந்தால் சொல் வேரிலிருந்து வளர்ந்து வந்திருக்கும் நிலையைக் காணலாம். ஒவ்வொரு வேரும் அச்சொல் வளர்ச்சிப் பற்றிய செய்தியினை உள்ளடக்கியதாக இருக்கும். இச்செய்தி, உண்மையில் சுருக்கமாக அல்லது பொதுக் கருத்தாக அமையும் (MaxMuller 1987: X).

நன்கு பிணைப்புநிலை எய்திய சொற்கள் உட்பட எல்லாச் சொற்களும் பிரித்துக் காணத்தக்க கருத்தியல் அடிப்படையில் அமைந்தனவாக இருக்கின்றன. இறுதியாக வருவது எனக் கருதும், பிரித்தெடுத்தல் பகுதி, இப்பொழுது இயன்மொழி வளர்ச்சியிலும், எண்ண வளர்ச்சியிலும் முதலாவதாக வரும் என்று மெய்ப்பித்துக் காட்டப்பட்டுள்ளது (மேலது 1987: XI).

மொழியில்லாமல் எண்ணம் இல்லை. அதேபோல் எண்ணம் இல்லாமல் மொழி இல்லை. மொழியும் எண்ணமும் இணை பிரியாத தன்மை கொண்டிருக்கின்றன. மக்களின் மனத்திலிருந்து வருபவை சொற்களில் தம் நிலைப்புத் தன்மையை நாட்டுவதற்கு முன் எண்ணங்களே முதல் கருத்துருவம் பெறும் இடங்களாக இருக்கின்றன (மேலது 1987: IX).

ஆகையால் சொல்லும் எண்ணமும் பின்னிப் பிணைந்து இருக்கும் என்பது உறுதியாகிறது. இவ்வடிப்படையை நன்கு புரிந்து கொண்டிருந்தமை யாலேயே சொற்களுக்குக் கருத்தடிப்படையில் வேர்விளக்கம் சொல்லும் உத்தியைப் பாவாணர் கையாண்டுள்ளார். இவர் மொழியியல் தொடர்பான மேலையர்தம் ஆராய்ச்சிகளைத் தழுவியே தம் ஆய்வினை மேற்கொண்டமை குறிப்பிடத்தக்க சிறப்புக்குரியதாகும். இதை இந்நூலிலுள்ள கட்டுரைகள், ஆங்கிலத்தில் திரெஞ்சு கண்காணியார் எழுதியுள்ள சொற்படிப்பு என்னும் கட்டுரைத் தொகுதியின் போக்கைத் தழுவி எழுதப்பெற்றவை (பாவாணர் 1992 : முக. VI) என்று அவரே கூறுவதிலிருந்து அறியலாம்.

மொழியியல் தமிழுக்கு ஒருவகையில் புதுவரவு என்றாலும் மொழியை ஆய்ந்து நுணுக்கங்களைத் தெரிவிக்கும் நிலை பழைய இலக்கண அறிஞர்கள் கண்டவையே. மொழிநூலறிஞர் பாவாணர்

மேனாட்டறிஞர்கள் ஆராய்ச்சிக் கருத்துகளைப் பலவிடங்களில் ஏற்றும் வழி மொழிந்தும் விளக்கியும் செல்வார் (பூங்காவனம் 1986: 18, 19). அதே நேரத்தில் மொழிநூல் தோற்றத்தின் கூறுகள் தமிழ் இலக்கியத்தில் பொதிந்து கிடப்பதை ஆங்காங்கே எடுத்துக்காட்டுவார். இவர் விளக்கியவற்றுள், குறிப்பாகத் தமிழைச் செந்தமிழ், கொடுந்தமிழ் என்று இரண்டாகப் பகுத்து விளக்கியமை, செந்தமிழ்ச் சொல்லை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்று நால்வகையாகப் பாகுபடுத்திக் காட்டியமை, திரிசொற்களை முதனிலை, ஈறு, இடைநிலை, சாரியை, புணர்ச்சி, திரிபு என ஆறுறுப்புகளாகப் பகுத்துச் சொல்லமைப்பு கண்டமை போன்றவற்றை எடுத்துக்காட்டலாம்.

பாவாணரது ஆராய்ச்சியில் குறிப்பிடத்தக்கது என்னவென்றால் பல இடங்களில் இலக்கணம், மொழிநூல் அறிஞர்கள் போன்றோர் கூற்றுகளில் காணப்படும் குறைகளையும் சுட்டி விளக்குவதாகும். இவ்வகையில் "இற்றைத் தமிழ் நிலையின் உயிர்நாடி தொல்காப்பியம் ஒன்றே" (பாவாணர் 2001:152) என்று மிகுந்த மதிப்புடன் நோக்கும் இவர் தொல்காப்பியத்தில் உள்ள குறைகளைச் சுட்டியுள்ளமையை எடுத்துக்காட்டலாம். இலக்கணம், மொழிநூல் ஆகியவற்றில் காணும் குறைகளைச் சுட்டிச் செல்வது இவரது ஆழ்ந்த மொழிநூற் பயிற்சியைக் காட்டுவதாக இருக்கிறது.

### 5. குடும்பம்

முன்பு ஒரு மொழியாக இருந்ததிலிருந்து பின்னர்ப் பல மொழிகள் உருப்பெற்று வந்துள்ளன என்பது ஒப்பியல் மொழியியலில் நன்கு நிறுவப்பட்ட உண்மையாகும். பின்னர் உருவான இம்மொழிகளும் தம் பங்கிற்கு ஒன்றேயாக இருக்காமல் பல கிளை மொழிகளாக உருவாகின்றன. திரவிட மொழியியலாளர்கள் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் போன்ற மொழிகள் அடங்கிய குடும்பத்தைத் திரவிடக் குடும்ப மொழிகள் என்று கூறுகின்றனர். ஆனால் பாவாணர் தரும் விளக்கம் வேறுவகையாக இருக்கிறது. "தமிழும் திரவிடமும் சேர்ந்தது தமிழியம். தமிழல்லாத தமிழின மொழிகளே திரவிடம். தமிழும் திரவிடமொழிகளிலுள்ள தமிழ்க்கூறும் சேர்ந்ததே தென்மொழி" (பாவாணர் 1968 :1) என்று இக்குடும்ப மொழிகளுக்கு ஒரு புது வரையறை தருகிறார்.

இக்கருத்தில் இரண்டு குறிப்புகள் குறிப்பிடத்தக்கனவாக இருக்கின்றன. ஒன்று திரவிடம் என்ற பெயர். மற்றொன்று குடும்ப மொழிகளாகக் குறிப்பிட்டுள்ளவை. திரவிடம் என்ற சொல் தமிழம் என்ற சொல்லிலிருந்து பிறந்தது என்பது இவரது கருத்து. திரவிட மொழிகளுக்கு ஒப்பிலக்கணம் வரைந்த கால்டுவெல் திரவிடம் என்ற சொல்லிலிருந்தே தமிழ் என்ற சொல் வளர்ந்தது என்பார் (Caldwell 1987:8). ஆனால் தமிழிலிருந்து தான் திரவிடம் திரிந்தது என்பதை மிகத்தெளிவாக விளக்குகிறார் பாவாணர்.

இரண்டாவதாகத் திரவிடக் குடும்ப மொழிகளுக்குள் தமிழை அடக்காமல் தனியாக வைத்து எண்ணுவதைக் குறிப்பிடலாம். இவ்வடிப்படையைப் பார்ப்பதற்கு மொழிகளின் பகுப்புக் காரணங்களைப் பார்ப்பது இன்றியமையாதது. மொழிகளின் பகுப்பிற்கு இரண்டு வகையை மொழியியலாளர்கள் மேற்கொள்கின்றனர். ஒன்று இனத்தொடர்பு (Genealogy). மற்றொன்று அமைப்பு வகைப்பாடு (Typological Classification).

### 6. இனத்தொடர்பு

ஒலிகளிலும், ஒலிகள் இணைந்து நிற்கும் சொற்கூறுகளிலும் (morphemes) சொற்களிலும், சொற்கள் இணைந்து செயல்படுவதிலும், அவை தரும் பொருளிலும் சில மொழிகள் தம்முள் ஒற்றுமை உடையனவாக இருக்கின்றன. இவ்வொற்றுமைகள் இன அடிப்படையில் அமைந்தன என்று கொண்டு இம்மொழிகள் ஒரே இனம் அல்லது குடும்பத்தைச் சார்ந்தன என்று குறிப்பிடுவர். அவ்வகையில் தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு, குடகு, கோத்தம், துடவம், படகு உள்ளிட்ட மொழிகளைத் திரவிடக் குடும்ப மொழிகள் எனக் குறிப்பிடுவர். இக்குடும்ப மொழிகளுக்கிடையே ஒற்றுமை பல்வேறு நிலைகளில் காணக்கிடக்கின்றன. அவ்வாறென்றால் தமிழைத் திரவிடக் குடும்ப மொழிகளிலிருந்து தனியாக வைத்ததன் காரணத்தைக் காண வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

### 7. அமைப்பு வகைப்பாடு

மொழிகளுக் கிடையே காணும் அமைப்பை அடிப்படையாக வைத்துப் பகுப்பது அமைப்பு வகைப்பாடு. இவ்வடிப்படையிலும் தமிழும் திரவிட மொழிகளும் ஒற்றுமை கொண்டு இருக்கின்றன. அதாவது அம்மொழிகள் ஒட்டுநிலை அமைப்பு உடையனவாக இருக்கின்றன. இம்மொழிகளில் இலக்கணக் கூறுகள் பல ஒட்டுகளால் காட்டப் படுகின்றன. அவ்வாறு என்றால் அமைப்பு வகைப்பாட்டிலும் தமிழும், திரவிட மொழிகளும் ஒரே வகையினவாகவும், ஒரே குடும்ப மொழிகள் எனக் கருதத் தக்கனவாகவும் இருக்கின்றன. இப்படி இருக்கும் பொழுது தமிழைத் திரவிட மொழிகளி லிருந்து தனியாகக் கொண்டதன் அடிப்படை என்ன என்பதைப் பார்க்க வேண்டும்.

பாவாணர்தம் கூற்றுப்படி தமிழ் ஆரியத்துணை வேண்டாத இயன்மொழி. தமிழல்லாத திரவிடம் அதை

வேண்டும் திரிமொழி (பாவாணர் 1968 : 1). திரவிடக் குடும்ப மொழிகளுள் முதன்முதலில் திருந்திய தன்மை எய்தியது தமிழ்மொழி. இது சொல்வளம் மிக்கமொழி. பழமைத் தன்மை பலவற்றை உள்ளடக்கிய மொழி. ஆகையால் திரவிடக் குடும்ப மொழிகளுள் தலைமை இடத்தில் வைத்துக் கணக்கிடும் தன்மை கொண்டது இம்மொழி (Caldwell 1987:6). இது வட சொற்களை முழுவதும் நீக்கித் தனித்து நிற்கும் தன்மை கொண்டது. இவ்வாறு இருக்கும் பொழுது திரவிட மொழிகளுக்கு அப்பால் தமிழை வைத்து நோக்கியதன் அடிப்படை விளங்குகின்றது. குடும்ப மொழியாகப் பகுத்துக் கொண்ட பின்பு அவற்றின் முந்து வடிவம் காண்பதற்கு முற்படுதல் மொழியியல் அடிப்படையில் ஏற்புடைய கோட்பாடே. திரவிடக் குடும்ப மொழிகளுள் திரவிடத் தன்மை மிகுதியாக இருக்கும் மொழி தமிழ் என்று கொண்டபின் தமிழ்க்கூறுகளே முந்துமொழி நிலைக்கும் பெரும்பான்மையான இடங்களில் பொருந்தி வருவனவாக இருக்கின்றன. இக்குடும்ப முந்துமொழித் தன்மையோடு பொருந்திவரும் ஒரு மொழியை அக்குடும்ப மொழிகளின் தாய் என்று கருதுவது சரியாகத்தான் அமைகிறது. அதனால்தான் தமிழ் திரவிடத்திற்குத் தாய் என்று விளக்கினார் பாவாணர். தமிழைத் திரவிடமொழிகளுக்குள் அடக்காமல் தனியாக வைத்துக் கணக்கிட்டார்.

பாவாணர் கருத்துப்படி திரவிடக் குடும்பம் என்று சொல்வதற்கு மாறாகத் தமிழியக் குடும்பம் என்று சொல்லுதலே ஏற்றதாகும். இக்குடும்பத்தில் தமிழும் பிற திரவிடமொழிகளும் அடங்கும். இவ்வாறு கூறிய பின் தமிழும் திரவிட மொழிகளிலுள்ள தமிழ்க்கூறுகளும் சேர்ந்தது தென்மொழி என்பார். தமிழியக் குடும்பம் என்று கொண்ட பின் தென்மொழி என்று மீண்டும் சொல்ல வேண்டிய தேவை என்ன என்ற வினா எழுதல் இயற்கை. தென்மொழி என்று குறிப்பிட்டது மிகை என்றும் கருதத் தோன்றும். ஆனால் அவர் கருத்துப்படி, உண்மை அவ்வாறு இல்லை. இன்று தமிழில் வழக்கிழந்த பல பழைய சொற்களும், இலக்கணக் கூறுகளும் பிற திரவிட மொழிகளில் இருக்கின்றன. அவற்றைத் தமிழோடு மீண்டும் இணைத்துக் கொள்ள வேண்டும் என்பதே பாவாணரின் விருப்பம். அவ்வாறானால் தமிழ் தன் பழைய தன்மையை, முழுத் தன்மையைப் பெறும் என்பதில் ஐயம் இல்லை. இந்தப் பழைய தன்மையை அல்லது முந்து தன்மையையே பாவாணர் தென்மொழி என்று குறிப்பிட்டுள்ளார். மொழியியலில் ஒரு மொழிக்கு முன்னை மொழி (pre–stage) என்ற நிலையை வைத்து ஆராய்வது ஒப்புக் கொண்ட முடிபே. இக்கூற்றுப்படி தென்மொழியே தமிழாக மாறி இருக்கிறது. தமிழும், திரவிட மொழிகளும் தமிழியக் குடும்பத்தைச் சார்ந்தன.

தென்மொழி என்று பெயரிட்டதன் சிறப்பு எண்ணிப் பார்க்கத் தகுந்தது. அறிஞர்கள் பலரும் திரவிட மொழிகளைத் தென்னாட்டு மொழிகள் என்று குறிப்பிட்டுள்ளது இங்கு நினைவு கூரத்தக்கது. திராவிடக் குடும்ப மொழிகளை முதலில் தனியாகக் காட்டிய பிரான்சிசு எல்லீசு (Francis W. Ellis 1780–1819) தென்னாட்டு மொழிகள் என்றே குறிப்பிட்டுள்ளார். கால்டுவெல் தம் ஒப்பிலக்கணத்தைத் திரவிடக் குடும்ப மொழிகள் அல்லது தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம் என்றே குறிப்பிட்டுள்ளார். இப்பின்னணியில் பார்த்தால் தென்மொழியென்று பெயரிட்டதன் சிறப்பு விளக்கமுறுகிறது.

### 8. மாற்றம்

மொழி காலந்தோறும் மாறும் இயல்புடையது. அனைத்து மொழிகளிலும் மாற்றம் தொடர்ந்து இருக்கும். பழைய இலக்கியம் அமைந்த மொழிகளின் மொழி மாற்றத்தினை நாம் எளிமையாகக் கண்டுவிடலாம். அதே நேரத்தில் மொழி மாறும் வேகத்தினை அறுதியிட்டுக் கூறிவிட முடியாது. ஒருவனுடைய மொழி தன் இளம்பருவத்தில் தன் பாட்டனார் போன்றோர்களிட ம் பேசக்கூடிய அளவிற்குப் புரிந்து கொள்ளுந்தன்மையுடன் இருக்கும். அதேபோல் அகவை முதிர்ந்த பின்பு தன் பேரக்குழந்தைகளுடன் பேசினால் புரிந்துகொள்ளும் அளவிற்கு மொழியிருக்கும். மொழி மாற்றத்திற்கு உள்ளாகிறது என்ற கோட்பாட்டினை வைத்துப் பார்க்கும் பொழுது மாற்றத்தின் வேகம் குறைவாக அல்லது இரண்டுக்கு மேற்பட்ட தலைமுறையினர் புரிந்து கொள்ளும் அளவிற்கு ஏற்ப நிகழும் என்பது வெளிப்படை. மொழியின் தன்மையினை விளக்குவதற்குத் தேவையான சான்றுகளை மொழிமாற்றம் காட்டுகிறது (Bloomfield 1996:281) என்பன போன்ற மொழியியலாளர் கருத்துகளை முற்றவும் உணர்ந்தவராகத்தான் பாவாணர் விளங்கினார் என்பதனை அவர் மொழிமாற்றங்களைக் கூறுவதிலிருந்து அறியலாம்.

இன்றைய திரவிட மொழிகளின் வளர்ச்சிகளைக் குறிப்பிடும் முகத்தான் 'மொழிகள் திரிந்து கொண்டேயிருப்பதால் முற்காலக் கொடுந்தமிழ்களே பிற்காலத் திரவிட மொழிகள் என்றறிதல் வேண்டும். முதலிரு கழகக் காலத்தும் இருந்த கொடுந்தமிழ் நிலங்கள் இற்றைத் திரவிட மொழி நிலங்களே. திரவிட மொழிகள் ஆங்கிலமும் வடமொழியும் போன்ற அயன்மொழிகளல்ல. ஆகவே திசைச்சொல் என்பது அயன்மொழிச் சொல்லன்று" (பாவாணர் 1968:3) என்று தெளிவாகக் கூறியிருப்பதால் அறியலாம். என்றாலும் ஆயிரமாண்டிற்கு ஒரு முறை அடிப்படைச்சொல் உட்பட முற்றும் மாறிவிடுகின்றன என்னும் கூற்றை அவர் மறுக்கிறார் (மேலது: பக்.99).

மொழி மாறும் இயல்புடையது. ஆனால் எல்லாமொழிகளும் ஒரே சீராக மாற்றம் கொள்வதில்லை.

பல்வேறு காரணங்களால் மொழிமாற்றம் மொழிக்குமொழி மாறுபட்டதாக இருக்கும். தமிழில் திரவிட மொழிகளை நோக்க வட மொழிக்கலப்புக் குறைவு. தமிழில் மிகப்பழைய இலக்கிய இலக்கணங்கள் இருப்பதால் மாற்ற வேகத்தை ஓரளவிற்குக் கட்டுபடுத்தி வந்திருக்கின்றன. இதனையே நிலைப்புத் தன்மை என்று குறிப்பிடலாம்.

### 9. மாற்றம்: நிலைப்புத்தன்மை

"சசியூரின் (Saussure) கொள்கைபடி ஒப்பீட்டு மொழியியல் 'ஆய்வுமுறையில் இன்றியமையாத குறிப்பு ஒன்று போதுமான அளவு அழுத்தம் தரப்படவில்லை என்பதை மெய்லட் (Meillet) விளக்குவார். அதாவது இரண்டு அல்லது இரண்டிற்கும் மேற்பட்ட மொழிகளுக்கிடையே உள்ள உறவுகளைக் காணும்பொழுது காணும் ஒப்புமாற்றங்களைக் காண்பதோடு நிற்காமல் மாற்றங்களுக்கிடையே, அவை தக்க வைத்திருக்கும் ஒத்த தன்மைகளைப் பார்க்க வேண்டும் என்பார். கிரிம் (Grimm) மொழிகள் ஒரே நிலையில் நிலைத்திருக்காது என்கிறார். இவர் கருத்தைச் சசியூர் ஏற்றுக்கொண்டாலும் மாற்றங்களுக்கிடையே சில தன்மைகள் பாதுகாக்கப் படுகின்றன எனவும் குறித்துள்ளார். ஆகக் கருத்தியல் அடிப்படையில் மொழிகளில் மாற்றம், நிலைப்புத்தன்மை ஆகிய பண்புகளைக் காணலாம்" (Mahulkar 1992:16).

ஆக மற்ற திரவிட மொழிகளைக் காட்டிலும் தமிழில் நிலைப்புத் தன்மைக்கு வாய்ப்பு மிகுதி என்ற அளவில் பாவாணர்தம் கருத்து ஏற்றதாக இருப்பதைக் காணலாம்.

### 10. மொழிப் பயிற்சி

மரபிலக்கணத்தில் நன்கு தோய்ந்த பயிற்சியுடையவர் பாவாணர். பழந்தமிழ் இலக்கணங்களின் சிக்கலான இடங்களுக்கு உரிய விளக்கம் அளித்துத் தெளிவு படுத்தும் திறம் உடையவர். சான்றுக்குச் சொல்ல வேண்டும் என்றால் சகரம் அ, ஐ, ஔ ஆகிய மூன்றல்லாப் பிற உயிர்களோடு கூடி மொழி முதலில் வரும் என்ற தொல்காப்பிய (எழுத்து.62) நூற்பாவிற்கு இவர் தரும் விளக்கத்தைக் குறிப்பிடலாம். சகரம் அகரத்தோடு கூடி மொழி முதலில் வரும் இடங்கள் பலவற்றைக் காட்டி அவை தனித்தமிழ்ச் சொற்களாய் இருப்பதை எடுத்துரைத்து அந்நூற்பாவிற்கு 'அவை ஔ என்னும் ஒன்றலங்கடையே' என பாடவேறுபாடு இருப்பதை நினைவு கூர்ந்து விளக்குவதை எடுத்துக் காட்டலாம்.

### 11. மீட்டுருவாக்கம்

மொழியியலாளர் மீட்டுருவாக்கம் செய்து மொழியின் முந்தைய நிலையைப் பற்றிக் கூறுவதுபோல் பாவாணரும் ஆங்காங்கே மீட்டுருவாக்கம் செய்துள்ளார். சொற்கள் நிலையில் இலக்கணக் கூறுகள் என்று பல நிலைகளில் நுண்கருத்துகளை விளக்குவதில் திறன் உடையவராக இருந்துள்ளார்.

கிளி அரிது, மூங்கா இல்லை என்பன போன்று வரும் தொடர்களால், "தமிழும் ஒரு காலத்தில் ஆங்கிலத்தைப் போல் புணர்ச்சியின்றி எழுதப்பட்டமை ஊகிக்கப்படும்" (தொல். எழுத்.141. அடிக்குறிப்பு) என்று முந்தைய நிலையை இவர் சுட்டுவதைச் சான்றுக்குக் காட்டலாம்.

### 12.மொழி

"மக்கள் வாழ்வில் மொழிக்குப் பெரும்பங்கு உண்டு. இவ்வாறு இருந்தாலும் மொழியைப் பற்றி மிக அருகியே நாம் சிந்திக்கிறோம். உயிர்ப்பது போலவும், நடப்பது போலவும் மொழி நமக்கு இயல்பானது என்று கருதுவதே இதற்குக் காரணம். மக்கள் வாழ்வில் மொழியின் தாக்கம் குறிப்பிடத்தக்கது. விலங்கிலிருந்து மக்களை வேறுபடுத்திக் காட்டுவது மொழி" (Bloomfield 1996:2).

மொழி மக்கள் வாழ்வின் பல்வேறு நிலைகளுடன் தொடர்பு கொண்டது. ஆகையால் அது பல கோணங்களில் ஆராய இடம் அளிக்கிறது. அவ்வாறு ஆராயும் அனைத்து ஆய்வுகளும் பயன் உள்ளவை; தகுதியானவை. மொழியை அதன் அக அமைப்பைக் கொண்டு ஆராயும் நோக்கத்தில் அமையும் அறிவியலே மொழியியல். இது வேறெந்த துறையையும் சாராத தனியானது அன்று. அதே நேரத்தில் இது தெளிவாகவும் தன் வரம்புக்கு உட்பட்டு தனக்கேயுரிய தன்மையிலும் வளர்ந்த துறையாகும். இது தனக்கு வேண்டிய அடிப்படைக் கருத்துகளையும், சான்றுகளையும் பிற துறைகளிலிருந்து ஏற்றுக்கொள்கிறது. மொழியியல் பிற அறிவியல் துறைகளுடன் நெருக்கம் கொண்டிருந்தாலும் இது மொழியின் அமைப்பைப் பற்றி. ஆராயும் தன்மையை அடிப்படையாகக் கொண்டு தனியான துறையாகத் திகழ்கிறது.

இவ்வாறு இருக்கும் மொழியறிவைப் பற்றிப் பலரும் அறிய வேண்டிய சூழல் உருவாக்குவதற்குப் பாவாணரின் பங்களிப்பு மிகச் சிறந்தது. மொழி என்றவுடன் அதன் இயல்பான தன்மைகளை விளக்க வேண்டும் என்று தமிழைப்பற்றிய பல உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளார். தமிழ் உள்பட சார்ந்து நிற்கும் குடும்பமொழிகளுக்கு இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக் காட்டியுள்ளார். சொல்லாராய்ச்சியில் இவரது பங்களிப்பு பரந்து பட்டது. சொன்மூலங்களைக் கண்டு ஆராய்வதோடு நிற்காமல் இனச் சொற்களைத் திரவிடக் குடும்ப மொழிகளிலிருந்து காட்டியுள்ளார். எல்லாவற்றிற்கும் மேலாகத் தமிழ்ச்

சொற்கள் பலவற்றிற்கு இணையான பிறமொழிச் சொற்களையும் காட்டியுள்ளார். அதிலும், குறிப்பாகக் கிரேக்கம், இலத்தீனம், எபிரேயம் போன்ற பழம் பெரும் மொழிச் சொற்களுடன் தமிழ்ச் சொற்களை ஒப்புமை படுத்தியிருப்பது இவரது அரிய முயற்சியைக் காட்டுவதாக இருக்கிறது. இது பிற்கால ஆராய்ச்சி யாளர்களுக்குப் பேருதவியாக இருக்கும்.

### குறிப்புதவி நூல்கள்


1. இளங்குமரன், இரா., 1985, தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

2. பாவாணர், 1944, திரவிடத்தாய், கழகம், சென்னை. பாவாணர், 1950, உயர்தரக் கட்டுரைகள், கழகம், சென்னை.

3. பாவாணர், 1968, வண்ணனை மொழிநூலின் வழுவியல், நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி.

4. பாவாணர், 1992, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், கழகம், சென்னை. (முதற்பதிப்பு 1949)

5. பாவாணர், 2001 ஒப்பியன் மொழிநூல், தமிழ்மண் பதிப்பகம், சென்னை, (முதற்பதிப்பு 1940).

6. பூங்காவனம், 1986, உலக முதன்மொழி தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

7. Bloomfield, L., 1996, Language, Motilal Banarsidas, New Delhi (First Published 1935).

8. Caldwell, R., 1987, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, AES, New Delhi (First Published 1856).

9. Hans Arself, 1982, From Locke to Saussure, Great Russel St. London.

10. Mahulkar, D.D., 1992, Some Misconceptions in Linguistic Studies, Monohar Publication, New Delhi.

11. MaxMuller, F., 1987, Biographies of Words and the Home of the Aryans, AES, New Delhi (First Published 1888).

12. Subrahmanyam, P.S., 1983, Dravidian Comparative Phonology, Annamalai University.


## மயங்கொலிச் சொற்கள்

**ஆலி**

1. அமுதம் 2.கூட்டம் 3.மழைத்துளி 4. தேனீ 5. தோழி 6.காற்று 7. தேள் 8. ஆலங்கட்டி "ஆலிபோல் முத்திருக்கும்" (சீவக.2786) 9. கள்

**ஆழி**

1. வட்டம் 2. மோதிரம் (கணையாழி) 3. சக்கரம் 4. உருளை
"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது" (குறள்.08)

**ஆளி**

1. ஒருமரம் 2.செடிவகை 3.அரிமா 4. ஒழுங்கு 5. பாலம்
5. ஆள்வோன் (நோயாளி, தொழிலாளி, அறிவாளி)

# பாயிரம் உணர்த்தும் தொல்காப்பியம் எனும் மயங்கா மரபு


**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா




தொல்காப்பியத்தை விளக்கி, முன்படுத்தி, அறிமுகப்படுத்தி பனம்பாரனார் எனும் பெரும்புலவர் ஒருவர் தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதியுள்ளார். பாயிரம் சிறப்புப் பாயிரம், பொதுப்பாயிரம் என இரண்டு வகைப்படும். சிறப்புப் பாயிரம் தனி ஒரு நூலுக்கெனவே அமைந்ததாகும். இப்பாயிரம் நூலாசிரியரைப் பற்றி கூறியிருக்கும். நூலாசிரியரைப் பற்றிய குறிப்புகள் இப்பாயிரத்தில் இடம்பெற்றிருக்கும். இந்தச் சிறப்புப் பாயிரத்தை நூலாசிரியரின் மாணவரோ, நண்பரோ, மகனோ நெருக்கமான ஒருவரோ பொதுவாக எழுதுவர்.

தாமே ஒருவர் பாயிரத்தைப் பாடினால் அது தற்சிறப்புப் பாயிரம் எனச் சொல்லப்பெறும். பிறர் ஒருவர் அந்தப் பாயிரத்தைப் பாடினால் அது சிறப்புப் பாயிரம் என்று பொதுவாகவே சுட்டப்பெறும். தொல்காப்பியத்தில் 'தன்புகழ் நிறுத்த படிமையோனே' அஃதாவது தொல்காப்பியர் எனும் தன் பெயரைச் சுட்டி அந்த நூல் எழுந்த கரணியத்தால், பாயிரத்திலும் தொல்காப்பியருடைய பெயரைச் சுட்டுகின்ற கரணியத்தால் அந்தப் பாயிரம் சிறப்புப் பாயிரம் எனச் சொல்லப்பெறும். பொதுப்பாயிரம் என்பது பொதுவாக நூலைப் பற்றிய பொதுக் குறிப்புகளை மட்டுமே உள்ளடக்கியிருக்கும். நூலாசிரியர் பற்றிய குறிப்புகளும் எவ்வகை அடையாளங்களும் பொதுப்பாயிரத்தில் இருக்கா. தொல்காப்பியத்தில் இடம்பெற்றது சிறப்புப்பாயிரமேயன்றி பொதுப்பாயிரம் அன்று.

பனம்பாரனார் இயற்றிய நூல் பனம்பாரம் என்பதே ஆகும். இவர் தொல்காப்பியரின் ஒருசாலை மாணாக்கர். அஃதாவது ஒன்றாகப் படித்தவர் என்று குறிப்புகள் காட்டுகின்றன.

பாயிரம் என்பதன் பொருள் அழைத்தல் என்பதாகும். அழைப்பதைப் பாயிரம் அஃதாவது பயிர்தல் எனக் கூறுவார்கள். 'மாந்தர்காள் இங்கேவம் ஒன்று சொல்லுகின்றேன்' என்று திருநாவுக்கரசர் அடியார்களை அழைக்கின்றார். 'நாக்கடிப் பாக வாய்ப்பறை அறைந்து சாற்றக் கேண்மின் ! சாற்றக் கேண்மின் !' என்று கபிலர் அகவல் கூறியது. இவையெல்லாம் பயிர்தல், அழைத்தல், அகவுதல் என்ற பொருளிலே வரும் செய்திகளாகும். 'ஒரு சொல் கேளீர்' என்று பாரதியார் தம்முடைய பாடலிலே பயன்படுத்தியுள்ளார். இவையெல்லாம் அழைப்பாக, விளியாக பிறரைப் பார்த்துப் பயன்படுத்திய வரிகள்.

'மறுமனத்தான் அல்லாத மாநலத்தை
வேந்தன்
உறுமனத்தான் ஆகி ஒழுகின் –
செறுமனத்தார்
பாயிரம் கூறிப் படைதொக்கால் என்செய்ப;
ஆயிரம் காக்கைக்கோர் கல்'

என்பது பழமொழி நானூறு.

மன்னர் போருக்கு வாருங்கள் என்று வீரர்களை நோக்கி அழைப்பதும் பாயிரம் என்று சொல்லப்பெற்றது. இதன் வாயிலாக இந்தப் பாயிரம் என்பது விளித்தல், அழைத்தல் என்ற பொருளில் ஆளப்பெற்றுள்ளது என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம். மிகப்பழநாளில் காதல் இணையாம் விலங்குகள், பறவைகளை அழைத்தல் பயிர்தல் எனப்பட்டது.

பயிர்தல் ஆனா பைதல் அம் குருகே
– (நற் 338/12) என்பது

நற்றிணையில் வரும் பாடல் வரியாகும். பருந்தின், பெடை பயிர் குரலாலே இசைக்கும் என்பது புறநானூற்றில் வருகின்ற வரியாகும். மாடு இணைசேர்ந்து கருவுருதலைப் பயிராகி இருக்கிறது என்பது இன்றும் மக்கள் வழங்குகின்ற ஒரு செய்தி. வளர்ப்பு விலங்கு பயிராகியிருக்கிறது என்று சொல்வார்கள். எனவே, பயிர் என்பது பயிர்தல் என்ற வினையின் அடிப்படையிலே உருவானது பயிர்தல், பயிரமாய், பாயிரமாய் உருக்கொண்டது.

அயிர் என்ற அருந்தமிழ்ச்சொல்லை ஒரு சான்றாய்க் கொள்ளலாம்; அயிர் என்றால் நுண்மணல் என்று பொருளாகும். நுண்மணலுக்குள் புதைந்திருக்கின்ற மீன் என்றும் பொருளாகும். அந்த மணலை நம்மால் எண்ண முடியாது. அது பல்கிப் பெருகி, பலவாகி இருக்கும். எனவே, பலவாயிருக்கின்ற எண்ணுக்குக் கூட பல என்ற பொருளில் அயிர், அயிரம் எனக் கூறுவார்கள். இந்த அயிரம் ஆயிரம் ஆயிற்று. இந்த அயிர் எனும் சொல் எப்படி ஆயிரமாகத் திரிந்ததோ, அதுபோல. (அல்>அய்>அயிர் என்று ஆனதுபோல;) நெருக்கம் என்ற பொருளிலே இந்தச் சொல் விளைந்தது;

கூப்பிடுதல் என்ற பொருளிலே ஒன்றை ஒட்டிப் பொருந்திக் கூறுதல் எனும் பொருளிலே பல்– பயிர்– பயிர்தல், பல்– பயிர்– பயிரம்– பாயிரம் என ஆனது. இந்தச் சொல் அமைப்புமுறையை நாம் நுட்பமாகக் கவனித்தால் இப்படித்தான் இந்தச் சொல் ஆக்கம் பெற்றது என்பதை உணரலாம். பாயிரம் என்னும் அழைப்புப்பொருள், நூல் கேட்கும் ஆர்வலரை அழைப்பதாக அமைந்தது. அதாவது தம் வீரரை விளிப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட இந்தச் சொல், ஒரு நூலை நூலாசிரியன் எழுதிய வேளையிலே, 'நூலைப் பாருங்கள், படியுங்கள்' என்று விளிப்பதாய், அகவுவதாய் இப்பாயிரம் அமைந்தது என்பதுதான் இதன் பொருள். அதற்காகத்தான் பண்டைய நாளிலே பாயிரம் எழுதுவர். பிற்காலத்தில் நன்னூலார் இதற்குப் பல்வேறு சொற்களை அமைத்துக் கொண்டு போகிறார். நூல் கேட்கும் ஆர்வலரை அழைப்பதற்காக நூலின் முகப்பாக அல்லது முன்னுரையாகச் சொல்லப்பெற்றது பாயிரம்.

அறிஞர் பெருமக்கள் இதனை வழிநூல் என்று குறிப்பிடுவார்கள். முதல்நூல், வழிநூல், வழிநூலைச் சார்ந்து எழுதப்பெற்ற சார்புநூல் என்று நூல்கள் பகுக்கப்பட்டிருக்கின்றன. முதல் நூல் முழுமுதல் நூலாசிரியனால் எழுதப்பெற்றது. பண்டைய நாளிலே தொடக்க நூலாக எழுதப் பெற்றது. முந்துநூல் என்று அதனைத் தொல்காப்பியரே சொல்கின்றார்.

முந்துநூல் எனப் பனம்பாரனார் பாயிரத்திலும் குறிப்பிட்டிருக்கின்றார். அந்த முந்துநூலைப் பார்த்து அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற நூல்கள் வழிநூல்கள் என்று சொல்லப்பெறும். அந்த வழிநூல்களைக் கொண்டு எழுதப்பெற்ற நூல்கள் சார்பு நூல்கள் எனச் சொல்லப்பெறும். இவ்வாறே நூல்கள் மூன்று வகையாகப் பிரிகின்றன. எனவே, அக்காலப்பரப்பில் பல்லாயிரக்கணக்கான தொன்முது நூல்கள் தோன்றியிருக்கின்றன. அப்படியான அந்தத் தொன்முது நூல்கள் படிப்படியாக அவற்றின் தன்மை குன்றாமல் அவற்றின் பிறங்கடையினரால் காக்கப்பெற்று, அவற்றின் கருத்தியல்கள் தொடர்ச்சியாகக் கொண்டு வரப் பெற்றன. அப்படிக் கொண்டு வரப்பெற்ற நிலையிலேதான் வழிவழி வந்த காப்பியக் குடியிலிருந்து வந்த தொல்காப்பியனார் தம் நூலில் ஆங்காங்கே குறிப்பிட்டுச் சொல்வது போல, என்றிசினாரே, என்மனார் புலவர், என்ப என்று எனக்கு முன்பதாகவே சான்றோர்கள் கூறியிருக்கின்றார்கள் எனச் சுட்டுவதைக் காணலாம். தொல்காப்பியத்திலே அவர் அதை மட்டும் சொல்லவில்லை.

தொல்காப்பியர் மிக மிகத் தன்னடக்கமானவர். பனம்பாரனார் தம் பாயிரத்திலே தொல்காப்பியரைப் பற்றி மிக உயர்வாகவும் சிறப்பாகவும் போற்றி உரைக்கின்றார். அவ்வளவு சிறப்பாகப் போற்றி பனம்பாரனாராலே உரைக்கப்பட்ட தொல்காப்பியர் மிகமிக தன்னடக்கம் மிக்கவர், தருக்கம் இல்லாதவர், அவருக்கு எல்லாம் தெரிந்திருந்தும்

அனைத்தும் தெரியும் என்ற மமதை போக்கு தொல்காப்பியரிடத்தில் இல்லை என்பதை அவர் தாம் கூறியதாகச் சொல்லாமல் தமக்கு முன்னால் 'நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே' என்று கூறுவதன் வாயிலாக அவர் எவ்வளவு தன்னடக்கம் உள்ளவர் என்பதை அவருடைய பாக்களை நாம் படிக்கின்ற பொழுது விளங்கிக் கொள்ளலாம்.

தொல்காப்பியத்திற்கும் முந்தைய நூல்கள் நமக்கு இக்கால் கிடைக்க வாயாமையால் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரமே எப்பாயிரங்களுக்கும் முதற் பாயிரமாக நமக்கு வாய்த்திருக்கிறது. தொல்காப்பியத்தில் இடம்பெற்ற சிறப்புப் பாயிரமே நமக்கு முழுமுதல் பாயிரமாக நமக்குச் சான்றாகக் காட்டுவதற்கு வாய்த்திருக்கிறது என நாம் உணர வேண்டும்.

தொல்காப்பியப் பாயிரம் கொண்டே பின்னை நூலாராம் நன்னூலார் விரித்தமைத்துள்ளார். மிகமிகப் பிந்தைய நூல் நன்னூல், அதில் பாயிரத்து இலக்கணத்தை விரித்து அமைத்துக் கொண்டார். அவருக்கு முன்னால் தொல்காப்பியத்திற்கு முன் எழுதப்பட்ட நூல்களை அடிப்படையாகக் கொண்டும், பிற்காலத்தில் தொல்காப்பியத்திற்குப் பிந்தைய நூல்களை அடிப்படையாகக் கொண்டும் நன்னூலார் பாயிரத்திற்கு இவ்வாறு விளக்கம் தருகிறார். முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை என இவையனைத்துமே பாயிரத்தைக் குறிப்பதற்கு நன்னூலார் வழங்கிய சொற்கள்.

பாயிரம் பற்றி நன்னூலார் கொடுக்கின்ற விளக்கத்தில் பாயிரம் யாரால் எழுதப்படும், என்ன குறிப்பிடப்பட்டிருக்கும் என்பனவற்றைத் தெளிவாக அறியலாம். நூலை ஆக்கியவரின் பெயர், அவரின் சிந்தனை அல்லது கொள்கை, அவர் எவ்விடத்தைச் சார்ந்தவர், அவர் இயற்றிய நூலின் பெயர், அவர் எந்த யாப்பு முறையில் நூலை எழுதினார், அவர் எந்தப் பொருளை அல்லது கருத்தினைக் கொண்டு எழுதினார், யாருக்காக நூல் இயற்றப்பட்டது, அதனால் என்ன பயன் என்பனவற்றையெல்லாம் நன்னூலார் பகுத்து ஆய்ந்து சொல்லியிருக்கின்றார். அதுமட்டும் அல்லாது, பாயிரத்திலே நூலின் காலம், நூல் இடம்பெற்ற களம், நூல் எதற்காக எழுதப்பெற்றது என்பனவற்றையும் நன்னூலார் விளக்கி யிருக்கின்றார். நன்னூல் பிற்காலத்து நூல், தொல்காப்பியம் தொன்மைக் காலத்து நூல். தொல்காப்பியம் வரையறை செய்யப்பட்ட தெளிவினைக் காட்டுகிறது. நன்னூல் பிற்காலத் தாக்கத்தைப் பெற்றமையால் பிற்காலத்தில் ஏற்பட்ட பல்வேறு சிதைவுகளையும் நன்னூல் கொண்டிருக்கின்றது.

தொல்காப்பியத்தில் இடம்பெற்ற சிறப்புப் பாயிரத்தில்

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலம் தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கறை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

என்கிறார் பனம்பாரனார். வடவேங்கடம் தென்குமரி என்பது வடக்கில் அமைந்த வேங்கட மலைக்கும், தெற்கில் அமைந்த குமரிமலைக்கும் எனப் பொருள்படும். ஆ இடை என்பதோ இடைப்பட்ட நிலப்பகுதிக்குள் என்று பொருள்படுகிறது. தமிழ்கூறு நல்உலகத்து என்பது நற்றமிழ் பேசும் மக்கள் வாழுகின்ற நிலப்பரப்பு அதாவது தமிழ் வழங்கும் நாடு எனப்படுகிறது.

வழக்கும் செய்யுளும் ஆ இரு முதலின் என்கிறார் பனம்பாரனார். இதன்வழி நாம் அறிவது மொழிவழக்குகள் இரண்டு என்பதுவே. ஒன்று மக்கள் வழக்கு. மற்றொன்று நூல் வழக்கு. இந்த இரண்டுமே மொழியின் நிலைப்பாட்டிற்கு இன்றியமையாதவையாகும். நூல் வழக்கு மக்கள் வாழ்வியலை நெறிப்படுத்தவும் மக்கள்

வாழ்வியலுக்குள் வழங்குகின்ற தூய வழக்காற்றுகளைத் தொகுத்து வைக்கவும் நூல் வழக்கு இருக்கும். நூல் வழக்கு நெறிப்படுத்திய வழக்கினை மக்கள் வழக்கு வாழ்வியலுக்குள் இயைந்து அதை நடைமுறைப்படுத்திக் கொண்டிருக்கும். எனவே, இரண்டுமே மொழி வாழ்வுக்கும் மக்கள் வாழ்வுக்கும் மிகவும் அடிப்படையாக இருக்கின்றன. ஒரு மொழி உயிராறு போல் என்றும் விளங்க வேண்டுமானால், மக்கள் வழக்கு, நூல் வழக்கு ஆகிய இரண்டு வழக்கும் இணைந்து இயங்கல் வேண்டும். மக்கள் வழக்கு ஒழிந்தால், அம்மொழி உயிருள்ள மொழியாகக் கருதப்படமாட்டாது. ஆதலால், இருவகை வழக்குகளையும் ஆய்ந்து நூல் செய்திருக்கிறார்.

தமிழ் மொழியானது வாழ தமிழ் இலக்கணங்கள் வாழ வேண்டும். தமிழ் மக்களின் வழக்கு அஃதாவது சொல் வாழ வேண்டும். நம் மொழிக்குள் அயற்சொற்கள் வந்துகொண்டே இருந்தால், நம் மரபு அழிந்து சிதைந்து தமிழ் இல்லாது போகிற நிலை ஏற்பட்டுவிடும். தமிழ் மக்கள் தமிழ்மையுடைய மக்களாக வாழ்கின்ற போதுதான் தமிழ் நிலையாக வாழும்.

தமிழர் இந்தியாவுக்குள் வந்தேறிய இனமக்கள் என்றும் அக்காலங்களில் தவறான செய்திகளைப் பரப்பியும் வந்துள்ளனர். மனோன்மணியச் சுந்தரனார், மறைமலையடிகள், பாவாணர் போலும் தமிழறிஞர்கள் இத்தகு வரலாற்றுத் திரிபுகளைக் கடுமையாகப் போராடி முறியடித்துள்ளனர்.

தொல்காப்பியப் பாயிரத்தில் வரும் செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு எனும் வரியானது தமிழ் தமிழர் மண்ணுக்கே உரித்தானது எனும் பொருளை உணர்த்தும்.

சிவணிய என்றால், நிலத்தோடு நிலமாகப் பொருந்தியிருத்தல் பற்றியிருத்தல் எனப் பொருளாகும். நிலம் வேறு இந்தச் செந்தமிழ் வேறு என்றில்லாமல் அந்த நிலத்தோடு சிவணியிருப்பது, உறைந்திருப்பது எனப் பொருளாகும்.

சிவ் >சிவண்> சிவணி எனப் பற்றியிருத்தல் எனும் பொருளிலே சிவணிய எனுஞ் சொல் இங்கு ஆளப்பெற்றிருக்கின்றது. எப்படி நம் உடலோடு தோல் ஒட்டியிருக்கின்றதோ, நம் உடலுக்குள் சதை எப்படி ஒட்டியிருக்கின்றதோ அது போல. பிய்த்தெடுத்தால் சதையும் குருதியுமாகத்தான் இருக்கும். குருதி பீறிட்டடிக்கும். அதுபோல இந்த மண்ணோடு மண்ணாகச் செந்தமிழ் இயல்புத் தன்மை ஊறியிருக்கின்றது; உறைந்திருக் கின்றது எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். அஃதாவது தமிழர் நாடு, தமிழர் மண் தமிழர் மரபுக்குரியது, தமிழ் மொழிக்குரியது என இதனை நாம் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

இதனால் தமிழர் அந்த மண்ணுக்கே உரியவர்கள் என நிறுவ இது ஒன்றே போதும். இவற்றுக்கெல்லாம் முரணாகத் தமிழர் வாழும் மண்ணிலேயே தமிழரை வந்தேறிகள் என்று புனைந்து வரலாறு எழுதியோரும் உண்டு. சிந்து வெளியிலிருந்து தமிழர்கள் துரத்தப்பட்டார்கள் எனும் ஒரு கருத்தை எழுதினார்கள். துரு, துர , துரத்தல் எனச் சொல் விளக்கம் செய்து , தமிழர்கள் சிந்து சமவெளியிலிருந்து துரத்தப்பட்டதால்தான் , இந்தத் துரு துரத்தல் எனுஞ் சொல்லிலிருந்து திராவிடர் எனுஞ் சொல் உருவாகியதாகவெல்லாம் கருத்தைப் பதிவிட்டிருக்கின்றார்கள்.

தென்னவன், தென்னாட்டான், தென்னாடு எனும் சொற்களும் சரி, செந்தமிழ் சிவணிய எனும் தொல்காப்பியத் தொடரும் சரி, சிலப்பதிகாரத்தில் இடம்பெற்ற பதியெழு வறியாப் பழங்குடி மரபு எனும் வரியும் சரி, உள்வீழ்ந்த கண்ணும் பழங்குடி எனும் வள்ளுவனார் கூறும் திருக்குறள் வரியும் சரி தமிழர் தமிழ் மண்ணுக்கே உரித்தான தொல்குடி மரபினர் என்பதையே தெளிவாக உணர்த்தும். தமிழர் தமிழ் நாட்டுக்கே உரியவர்கள், வந்தேறிகள் அல்லர் எனும் வெள்ளிடை மலையாகத் தெரியும் மெய்ம்மையினைத்தான், வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகு எனுந் தொல்காப்பிய வரியும் உணர்த்துகின்றது.

வடவேங்கடம் தென்குமரி என்பது தமிழ் கூறு நாட்டகத்தின் எல்லையைக் குறிப்பதாகும். வடவேங்கடம் என்பது மலையைக் குறிப்பது என முன்னரே கண்டோம். வடக்கே மலையைக் குறிப்பிட்டால் தெற்கேயும் மலையைத்தான் குறிப்பிட்டிருக்க வேண்டும். எதிரும் புதிருமாக எல்லையைக் குறிப்பிடும் போது வடக்கே மலையைக் குறிப்பிட்டதால் தெற்கேயும் மலையைத்தான் குறிப்பிட வேண்டும் என்பது ஒரு மரபு. ஒருகால் ஆற்றினைக் குறிப்பிட்டிருந்தால் எதிரே உள்ளே எல்லையைக் குறிப்பிடுகின்ற பொழுது ஆற்றைதான் குறிப்பிடுவார்கள். வடக்கே வேங்கட மலைதான் எனத் தெளிவாகத் தெரிகின்ற கரணியத்தால் தெற்கே குமரி எனப்படுவது குமரி மலையையே குறிப்பிடுவதாக நாம் ஐயந்திரிபற உணரலாம். வடக்கே உள்ள வேங்கட மலை என்பது இன்று இருக்கின்ற திருமலையையே குறிப்பிடுகின்றது. திருமலையே திருப்பதி எனப்படுகின்றது. பதி என்பது மக்கள் பதிந்துள்ள இடம் என்று பொருள். அரசன் அல்லது தலைவன் பதிந்துள்ள இடம் என்றும் பொருள். நெடியோன் குன்றம் என்றும் எழுகுன்றம் என்றும் இதனைக் குறிப்பிடுவார்கள். எழு குன்றமே ஏழுமலை என்றும் சொல்லப்பெற்றது.

இந்த எல்லைப் பரப்பில் தமிழ் மக்கள் தூய தமிழை, நற்றமிழை வழங்கி வாழ்ந்துள்ளனர். மொழி பெயர்ந்து பேசும் மக்கள் அல்லாத தூய தமிழைப் பேசுகின்ற, நற்றமிழ் வாழ்கின்ற நிலமாக இந்த எல்லைப் பரப்பு இருந்துள்ளது. நல்ல தமிழ் வாழ்கின்றது என்றால் தமிழன் அங்கு வாழ்கின்றான் என்று பொருள். தமிழ் அழிந்து போனால் தமிழன் அங்கு அழிகின்றான் என்று பொருள். தமிழ் சிதைந்தால் தமிழன் சிதைகின்றான் என்று பொருள். செந்தமிழ் வாழ்கின்ற பொழுது செந்தமிழன் வாழ்கின்றான் என்று பொருள். செந்தமிழ் இல்லாத போது அது கொடுந்தமிழானால் அங்குக் கொடுந்தமிழன் தான் இருப்பான். எனவே தமிழன் செந்தமிழனாக இருக்க வேண்டும் என்றால் தமிழ் செந்தமிழாக இருத்தல் வேண்டும். இன்றைய சூழலில் நல்ல தமிழைப் பேசுதற்கு மாறாக கலந்த சிதைந்த தமிழைப் பேசினால்.. செந்தமிழராக இருப்பவரும் மாறிவிடுவர் என்ற அச்சம் நமக்கு இருக்கின்றது. தொல்காப்பியர் அன்றைய காலவட்டத்தில் நற்றமிழை வழங்குங்கள் வட ஒலியைக் கலக்காதீர்கள் என்று மிகச் சிறப்பாக வரையறை செய்துவிட்டார்.

தொல்காப்பிய பாயிரவியலில் பனம்பாரனார்,

முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலம் தொகுத் தோனே போக்கறு பனுவல்

எனும் வரிகள் இடம்பெற்றுள்ளதை முன்னரே கண்டோம்.

தம் காலத்துக்கு முன்னை இருந்த புலமையாளர்களால், செய்யப்பட்ட இலக்கண இலக்கிய நூல்களைத் தொகுத்துப் பயின்றார் எனப் பனம்பாரனார் தொல்காப்பியரைப் பற்றிக் கூறுகின்றார். ஒரு நூலை மட்டும் பயிலவில்லை பல்வகைப்பட்ட அனைத்து நூல்களையும் பயின்றார் என இங்கே விளக்கம் பெறுகின்றது. புலவோர்கள் எழுதிய சிந்தனைகளையெல்லாம் ஒட்டுமொத்தமாகப் பயின்றார் எனக் கூறுகின்றார். அந்த முறைப்பட எண்ணி எனும் வரியை நாம் ஆராய்கின்ற பொழுது , ஓர் ஒழுங்கு முறைப்பட, மிக நுட்பமாக பல்வகையாலும் நூல் முறைமையை ஆராய்ந்து, அஃதாவது மேலோட்டமாக ஆராயாமல், படிக்காமல் மிக நுட்பமாக எந்தப் பொருளில் நூலோன் ஆக்கியிருக்கின்றான் என ஆராய்ந்து.. புலந்தொகுத்தோன் போக்கறு பனுவல் என்கின்றார். எதுவும் விடுபாடு இல்லாமல் தொகுத்து அமைத்தோன் என்று இந்த வரி கூறுகின்றது. அதுமல்லாமல், போக்கறு பனுவல் எனச் சொல்லி குற்றமற்ற நூல் என்று தொல்காப்பியத்தைப் பனம்பாரனார் கூறுகின்றார்.

புலம் என்று சொல்கின்ற பொழுது , பல்வேறு பொருளை அது தரும். ஆனால் இந்தப் பாடலிலே அறிவை அது குறிப்பிடும். ஆனால் இந்தச் சொல்லுக்குப் பல்வேறு பொருளை நாம் பார்க்கலாம். ஒரு புலம் அறிவைக் குறிப்பிடுகின்றது என்றால் மற்றொரு புலம் மண்ணைக் குறிப்பிடுவதாகும். மற்றொரு புலம் சேர்க்கையைக்

குறிப்பிடுவதாகும். சேர்தல் பொருளில் வந்ததுதான் மண் என்பது. மண் என்றால் ஒன்றோடு ஒன்று இயைந்து கலந்திருப்பது என்று பொருள். மண்> மணல் என்றால் சேராதிருத்தல் என்று பொருள். இவ்வகையில் புல் என்றாலும் சேர்தல் என்று பொருளாகும். புல்> புல்லுதல், புல்லினான் என்றால் கட்டித் தழுவினான் எனப் பொருளாகும். புல் என்பது சிறுமை எனும் பொருளையும் காட்டும். சேர்தல் பொருளில் வந்த புலம் என்பது மண்ணைக் குறிப்பிடுவதாகும்.

செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே

என்று நம்முடைய குறுந்தொகைப் பாடலில் வரி வரும்.

யாயும் ஞாயும் யார் ஆகியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே.

என்பது குறுந்தொகை. இங்குச் செம்புலம் என்பது மண்ணைக் குறித்து வந்த சொல்லாகும். எங்கிருந்தோ வானில் முகிலாய் மாறிப் பெயர்ந்து வந்த நீரானது செம்மண்ணில் மழையாகப் பொழிந்து அந்த மண்ணின் நிறத்தை அடைந்தது போல என அந்தப் பாடல் விளக்கம் சொல்கிறது. அங்கே புலம் மண்ணையே குறித்தது. உல் > புல்= சேர்தல் கருத்து வேர். புல் > புலம் என்றால் சேர்ந்திரு, ஒட்டிப் பிணைந்திருக்கின்ற மண் எனப் பொருள்.

ஆனால் தொல்காப்பியப் பாயிர வரியில் வரும். புலம் என்பதோ அறிவைக் குறிப்பதாகும். அறிவு ஒளிப் பொருளாக வரும். காலையில் சூரிய ஒளி எழும்பி சூழ்ந்திருக்கின்ற இருளைப் பிளந்து அகற்றி விலக்கி வெளிச்சத்தைத் தரும்.

இவ்வாறு வெளிச்சம் உருவாகுவதை ,

புல்> புலர் > புலர்வு என்பர்; புலர்தல் என்பர்.

புலர் பொழுது என்றால் ஒளி வீசும் காலைப் பொழுது எனப் பொருள். அறியாமை எனும் இருளை அகற்றி அறிவு எனும் ஒளி தோன்றுங் கரணியத்தால் அறிவும் புலம் எனப்பட்டது. புல் பிளத்தல் பொருளில் அமைந்து, இருள் பிளந்து வெளிச்சம் தோன்றுவதால், புல் ஒளி, வெளிச்சம், அறிவு எனும் பொருள்களைத் தந்தது எனலாம். புலப்பட்டு விட்டது என்றால் விளங்கி விட்டது என்று பொருள். புலமை என்றாலும் அறிவு என்றுதான் பொருளாகும்.

புலந் தொகுத்தோனே என்றால் அத்தனை அறிவு நெறிகளையும் , முன்னந் தோன்றிய சான்றோர் பெருமக்களின் சிந்ததனை களையெல்லாம் ஆய்ந்து தொகுத்தவன் என்று பொருளாகும். அது மட்டுமல்லாமல், அப்படியான புலமையோனால் எழுதப்பெற்ற தொல்காப்பியம் ஒரு போக்கறு பனுவல் என்றும் குறிப்பிடுகின்றார். போக்கு என்றால் போக்கத்தக்க குற்றங் குறைகள் என்று பொருளாகும். போக்கத்தக்க, தள்ளத்தக்க குற்றங்குறைகள் எதுவும் இல்லாத நூல் என இவ்வரி விளங்கிக் காட்டும். ஆகூழ், போகூழ் என்றெல்லாம் திருக்குறள் குறிப்பிடுவதைக் கண்டிருக்கலாம். ஆகூழ் நமக்கு ஏற்படும் அனைத்து நன்மையும் எனப் பொருள். ஆக்கம் என்றாலும் நமக்கு வரும் அனைத்துச் சிறப்புகளுமாகும். ஆனால் போகூழ் , போக்கம் என்றாலோ நமக்கு ஏற்படும் அனைத்து தீமைகளும் என்று பொருளாகும். ஆவது ஆக்கம்; போவது போக்கமாகும்.

போக்கு எனும் கேடுகள் எவையும் சேர்ந்திடா வண்ணம், அவை எவையும் இல்லாமல், தெள்ளிதாக, ஆக்கப் பெற்ற ஒரு நூல் தொல்காப்பியம் என்று பனம்பாரனார் குறிப்பிடுகின்றார்.

வெல்க தொல்காப்பிய நெறி!

# தமிழின் அணிகலன்கள்!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



'புல்லானாலும் புருசன், கல்லானாலும் கணவன்' என்பது பழமொழி.

போரில் இறந்து கணவன் நடுகல் ஆகிவிட்டாலும் அவன் கணவனே என்று மயிற்பீலி சூட்டி வழிபடுவர். நாட்டுக்கென்று போரிட்ட வீரர்களின் நடுகற்களை வழிபடுவது மரபு. நடுகற்களே கடவுள், வேறு எதுவும் கடவுள் இல்லை என்றும் கொண்டாடுவார்கள்.

'நிரைஇவண் தந்து, நடுகல் ஆகிய
வென்வேல் விடலை இன்மையின் புலம்பிக்,
கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக்
கலங்கிய கழிகலம் மகடூஉப் போல
புல்என் றனையால், பல்அணி இழந்தே'
(புறநானூறு – 261).

'களிறுபொரக் கலங்கு, கழன்முள் வேலி,
அரிதுஉண் கூவல், அங்குடிச் சீறூர்
ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை
நடுகல் கைதொழுது பரவும்... '
(புறநானூறு – 306).

'.. நாணுடை மறவர் பெயரும் பீடும் எழுதி
அதர் தோறும் பீலி சூட்டிய பிறங்கு நிலை
நடுகல்..' (அகநானூறு)

'...ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி,
ஒளிறுஏந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்தெனக்,
கல்லே பரவின் அல்லது,
நெல்உகுத்துப் பரவும் கடவுளும் இலவே'.
(புறநானூறு – 335)

'என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்."
(திருக்குறள்)

இக் காலத்தில் இறந்தால் போதும், உடனே சிலைதான்!

உண்மையான மாவீரர் நடுகல் தொழும் கூடம் தஞ்சை முள்ளிவாய்க்கால் முற்றமே!

காக்கை போன்ற பறவைகளை விரட்டப் புற்களும் வைக்கோலும் கொண்டு செய்யப்படும் பொம்மை புல் ஆள் – புல்லாள் என்று அழைக்கப்படும். அப்படிப்பட்டவனாய் இருந்தாலும் (புல்லானாலும்) அவன் கணவன் தானே என்று பழமொழி விளக்கம் கூறுவர்.

ஆண்மையின்றி வழிப்பறி செய்யும் ஆறலைக் கள்வரையும் (ஆறு – வழி, அலை – அச்சுறுத்து) புல்லாள் என்பர்.
(பிறர் வளர்ச்சி கண்டு மனம் பொறாதது பொறாமை ; இப்படி மனத்தில் அழுக்குச் சேரும் வழி அழுக்கு ஆறு – அழுக்காறாமை = பொறாமை)

'.. புலவு வில் உழவின் புல்லாள் வழங்கும்
புல்லிலை வைப்பின் புலம் சிதை அடம்பன்.. '
(பதிற்றுப்பத்து – 15).

இப் புல்லாள் வெருளி, புள்ளோட்டி, புள் விரட்டி என்றும் அழைக்கப்படும்.

மக்கள்நலம் நாடா உதவாக்கரைத் தலைவர்களும் சோளக்காட்டுப் பொம்மை, வெற்றுமுத்திரை (rubber stamp) என்று அழைக்கப்படுகின்றனர்.

இப் புல்லாள் ஆங்கிலத்தில் scarecrow எனப்படும். இதைப் பற்றிய உவமை, உருவகம், வஞ்சப்புகழ்ச்சி, குறியீடு.. நிறைந்த அழகிய, எளிய ஆங்கிலப் பாடல்:

"Once I said to a scarecrow, 'You must be tired of standing in this
lonely field.'

And he said, 'The joy of scaring is a deep and lasting one, and I
never tire of it.'

Said I, after a minute of thought, 'It is true; for I too have known that joy.'

Said he, 'Only those who are stuffed with straw can know it.'

Then I left him, not knowing whether he had complimented or belittled
me.

A year passed, during which the scarecrow turned philosopher.

And when I passed by him again I saw two crows building a nest
under his hat."
by Khalil Gibron.

'அரம்போலும் கூர்மையரேனும் மக்கட் பண்பு இல்லாவிட்டால் மரம் தானே! '

"அஞ்சி ஓடும் பறவைகளைக் கண்டு பொம்மை மகிழ்ச்சி அடைகிறது, பசிக்கு உணவு தேடும் மக்களை வருத்தி, வாட்டி மகிழும் அரசியலாளரைப் போல. ஓராண்டு சென்றதும் புல்லும் வைக்கோலும் சிதைந்து உருக்குலைந்து காணப்படும் பொம்மை மீது முன்பு விரட்டப்பட்ட பறவைகள் கூடு கட்டுகின்றன. ஆதலின், மக்களே தலையாயவர்! " – இது நான் நம் நாட்டு அரசியலுடன் பொருத்திக் கண்ட குறியீடு.

இப் பாட்டில் said, scarecrow போன்று சொற்கள் திரும்பத் திரும்ப வருவதை anaphora என்பார்கள்.

முதற்சொல் எடுத்துக்காட்டு :
"It was the best of times, it was the worst of times, it was the age of wisdom, it was the age of foolishness, it was the epoch of belief, it was the epoch of incredulity, it was the season of Light, it was the season of Darkness, it was the spring of hope, it was the winter of despair." (Charles Dickinson, A Tale of Two Cities).

இப்படி இறுதிச் சொற்கள் மீண்டும் மீண்டும் வருவது epiphora எனப்படும்.
எடுத்துக்காட்டு :
Fie, fie, thou shamest thy shape, thy love, thy wit,
Which, like a usurer, abound'st in all,
And uses none in that true sense indeed
Which should bedeck thy shape, thy love, thy wit."
(William Shakespeare, Romeo and Juliet).

தமிழில் பின்வரு நிலையணி என்று உள்ளது. இது, சொல்பின்வருநிலையணி, பொருள் பின்வரு நிலையணி, சொற்பொருள் பின்வரு நிலையணி என்று மூன்று வகைப்படும்.
கூறவந்த கருத்தை வலியுறுத்தும் புலவனின் உத்தியே அணி!

முதற்சொல் மீண்டும் மீண்டும் வருவது :

'தமிழுக்கும் அமுதென்று பேர்! – அந்தத்
தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்!
தமிழுக்கு நிலவென்று பேர்! – இன்பத்
தமிழ் எங்கள் சமுகத்தின் விளைவுக்கு நீர்!
தமிழுக்கு மணமென்று பேர்! – இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்!
தமிழுக்கு மதுவென்று பேர்! – இன்பத்
தமிழ் எங்கள் உரிமைச்செம் பயிருக்கு வேர்!... '
(பாவேந்தர்)

இறுதிச் சொல் மீண்டும் மீண்டும் வருவது :

'ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று
பேசுவார் உறவு கலவாமை வேண்டும்
பெருமைபெறும் நினது புகழ் பேசவேண்டும்
பொய்மை பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும் மதமான
பேய் பிடியா திருக்க வேண்டும்...'
(வள்ளலார்)

'ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்
போகாத இடந்தனிலே போக வேண்டாம்
போகவிட்டுப் புறம் சொல்லித் திரிய வேண்டாம்.... '
(உலகநாதர் எழுதிய உலக நீதி)

# எண்ணுப்பெயரை எண்ணுமுறைப் பெயராக்கல்



## (Cardinal number > Ordinal number)

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

மனித உறவாடல் கருவியான மொழியை மக்கள் தம் தேவைகளையும் நோக்கங்களையும் நிறைவேற்றப் பயன்படுத்துகின்றனர். அதற்காகப் பல வகைச் சொற்களை ஆக்குகின்றனர். இது தொடர்கின்ற அறிவாக்க நிகழ்வாகும். அந் நிலையில் எண்ணுப் பெயர்கள் குறிப்பிடத்தக்கன. வணிகம், பொருளாதாரம், அளவீடு ஆகிய தளங்களில் எண்ணுப் பெயர்கள் இன்றியமையாதன. இவை முழு/ பின்ன எண்களாக இயல்கின்றன. எத்தனை? என்று வினவும்போது எண்ணுப்பெயரில் 10. 120 என்று விடையிறுக்கின்றனர். இதுவே பெரும்பான்மை. ஆயினும் மற்றொரு தேவையான எத்தனையாவது? என்று அறிய விரும்பும்போது பத்தாவது, நூறாவது என்று எண்ணுமுறைப் பெயரால் குறிக்கப்படுகின்றன. தமிழில் 10 என்னும் எண்ணுப்பெயரை 10ஆவது அல்லது 10ஆம் என்று, ஆவது/ஆம் என்னும் ஒட்டுச் சேர்த்து எண்ணுமுறைப் பெயராக மாற்றலாம். பிறவும் இவ்வாறே.

ஆனால் இது ஒன்று என்னும் எண்ணுக்குப் பொருந்தாது, ஒன்றோடு ஆம் சேர்த்தால் முதல் என்றே மாறும்; ஒன்றாம் என்று நிலையாது. முதல் வகுப்பு; இரண்டாம் வகுப்பு/ முதல் பரிசு; இரண்டாம் பரிசு என்னும் ஆட்சிகள் நோக்கத்தக்கன. பின்வரும் ஆங்கில விளக்கத்தையும் கருதலாம்: Cardinal numbers are used to count objects or things, while ordinal numbers are used to show the order or position of objects or things.

நன்றி : இணையத் தரவுகள்

# அகரமுதலி இயக்ககத்
# தமிழ்க் கலைக்கழகத்தின் 170–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 170–ஆவது கூட்டம் 26.11.2024 ஆம் நாள் நடைபெற்றது. அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 170–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 157 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

### ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Hung jury | தொங்கு தீர்ப்பாயம் |
| Jury instruction | நயன்மையர் நெறிமுறை |
| Law librarian | சட்ட நூல் வல்லுநர் |
| Mittimus judgement | குற்றவாளி கொணர்வாணை |
| Public defender | இலவய வழக்குரைஞர் |
| Short calendar | குறுங்கால வழக்குப் பட்டியல் |
| Transfer hearing | அகவைமாற்றல் வழக்குமுறை |
| Trial referee | துணை நடுவர் |
| Bankruptcy court | நொடிப்புநிலை முறைமன்றம் |
| Smart cities mission | பொலிவுறு நகரத்திட்டம் |
| Personal tragedy | தனியர் அவலம் |
| Pest busters | தீங்குயிரி முற்றொழிப்பான் |





சேலம் புத்தகத் திருவிழா 2024

# புத்தகத் திருவிழா

## சேலம் மாவட்டம்



2024 29.11.2024 முதல் 09.12.2024 வரை

காலை 10:00 மணி முதல் இரவு 10:00 மணி வரை



சேலம் புதிய பேருந்து நிலையம் அருகில்

29.11.2024 முதல் 09.12.2024 வரை சேலம் புதிய பேருந்து நிலையத்தின் அருகே புத்தகத் திருவிழா நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

**தமிழ் வளர்ச்சித் துறை**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

**விலைப்பட்டியல்**

| தொ. எண் | நூல் பெயர் | விலை ரூ. | கழிவ (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா-கூ' முதல் எட்டாம் மடலம் 'வெ-வெள'வரை (17 தொகுதிகள் ) | 6000/- | 2100/- | 3900/- |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/- | 280/- | 520/- |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/- | 420/- | 780/- |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/- | 105/- | 195/- |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/- | 140/- | 260/- |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/- | 350/- | 650/- |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/- | 175/- | 325/- |

விலைப்பட்டியலில் உள்ள நூல்கள் அனைத்தும் புத்தகத் திருவிழாவில் கிடைக்கும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

செம்மொழித் தமிழ் காப்போம்!

செந்தமிழால் பேசுவோம் !

வாய்மையே வெல்லும்



தமிழ்நாடு அரசு

தமிழ்வளர்ச்சித் துறை

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்





எண்.75, முதல் தளம், நகர் நிருவாக அலுவலக வளாகம்
சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்
சென்னை–600 028.




Sorkuvai.tn.gov.in



044–22541209





## அகரமுதலித் தொகுதிகள்

## 35% கழிவு விலையில் நூல் விற்பனை

| தொ. எண். | நூல் பெயர் | விலை ரூ. | கழிவு (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா–கூ' முதல் எட்டாம் மடலம் 'வெ–வெள' வரை ( 17 தொகுதிகள் ) | 6000/– | 2100/– | 3900/– |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/– | 280/– | 520/– |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/– | 420/– | 780/– |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/– | 105/– | 195/– |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/– | 140/– | 260/ |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/– | 350/– | 650/– |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/– | 175/– | 325/– |

**புதிய வெளியீடு**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**

**திருந்திய பதிப்பு 7 தொகுதிகள்**

**விரைவில் விற்பனைக்கு முன் பதிவு செய்யப்படுகிறது.**

**குறிப்பு :** தொகையை மொத்தமாக அல்லது வங்கி வரைவோலையாக / காசோலையாக "The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai – 600 028" எனும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க (Payable at Chennai) வகையில் வழங்கலாம் அல்லது மின்னனு முறையில் வழங்கலாம் (through ECS Payment).

IFSC Code : IDIB000K204 Micr Code : 600019175

Account No. 759144235 (Indian Bank, Indira Nagar Branch, Chennai – 20.)



# அகரமுதலித் தொகுதிகள்
# 35% கழிவு விலையில்
# நூல் விற்பனை






29.11.2024 - 05.12.2024 வரை சேலம் மாவட்டத்தில் நடைபெற்ற புத்தகத் திருவிழாவில், தமிழன்பர்கள் இயக்ககப் பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி அவர்களிடம் அகரமுதலி இயக்ககச் செயற்பாடுகளைக் கேட்டறிந்ததோடு, அகராதிகளையும் ஆர்வமுடன் வாங்கிச் சென்று பயன்பெற்றனர்.

06.11.2024 - 09.12.2024 வரை சேலம் மாவட்டத்தில் நடைபெற்ற புத்தகத் திருவிழாவில் தமிழன்பர்கள் இயக்ககத் தொகுப்பாளர் கி. இராமர் அவர்களிடம் அகரமுதலி இயக்ககச் செயற்பாடுகளைக் கேட்டறிந்ததோடு, அகராதிகளையும் ஆர்வமுடன் வாங்கிச் சென்று பயன்பெற்றனர்.

